# முதலையும் தேளும்

ரெபேக்கா எம்பெர்லி & எட் எம்பெர்லி

தமிழில் கிருஷ்ணன்



ஒருவரை ஒருவர் கடித்துக்கொண்டும்,
கொட்டிக்கொண்டும் இருந்தால்
நண்பர்களாயிருப்பது எப்படி?...

ஒரு பெரிய நீளமான ஆற்றங்கரையில் ஒரு முதலையும், தேளும் “தான் உண்டு தன் வேலை உண்டு” என்று வாழ்ந்து வந்தார்கள் . ஒரு முறை தேளுக்கு ஆற்றை கடந்து செல்ல வேண்டும் என்ற ஆசை வந்தது . தானாகவே அதை செய்ய இயலாது என்பதால் முதலையிடம் ஆற்றை கடக்க உதவி கேட்டது . ஆனால் இருவரும் கொடிய பழக்கம் உடையவர்கள். ஒன்று கடிக்கும் , மற்றொன்று கொட்டும். நாம் இக்கதையின் மூலமாக இவர்களால் கொட்டாமல், கடிக்காமல் ஆற்றை கடிக்க முடிகிறதா? என்பதையே பார்க்க போகிறோம்.

# முதலையும் தேளும்

ரெபேக்கா எம்பெர்லி & எட் எம்பெர்லி

தமிழில் கிருஷ்ணன்





நீல நிற ஆற்றின் கரையில் ஒரு முதலை வாழ்ந்து வந்தது. தீரா பசியில் எப்போதும் இருந்தது முதலை. அதன் பசிக்கு ஒப்பிடும்போது அதன் மூளையோ மிக குறைவாகவே இருந்தது.

அதே கரையில் பாறாங்கற்களின் நடுவே
ஒரு தேள் வாழ்ந்து
வந்தது. அது கொட்டுவதில் இருந்த
கூர்மை புத்தியில் இல்லை.
இருவருக்குமே ஒரு கூழாங்கல்லின் அளவே
மூளை இருந்தது . அது சமயங்களில்
இருவருக்குமே உதவியாக இல்லை.



ஒரு நாள் எந்த காரணமும் இல்லாமல் தேள் நீல நிற ஆற்றை நோக்கி சென்றது.

ஏதோ ஒரு வேகத்தில் ஆற்றை கடக்க வேண்டும் என அதற்கு தோணியது. ஆனால் தன்னால் தனியாக ஆற்றை கடக்க முடியாது என்பதை அறிந்திருந்தது.

முதலை சுகமாக வெயிலில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தது. அதன் எண்ணம் எல்லாம் அடுத்த இரை மீனை பற்றியே இருந்தது.


தேள் முதலையின் முன்னால் வந்து நின்றது.
“மன்னிச்சிக்கோங்க எனக்கு இந்த ஆற்றை கடந்து
செல்ல வேண்டும். நீங்க தயவு செய்து எனக்கு
உதவ முடியுமா” என்றது தேள்.
சுவையான மீன் பற்றிய கனவில் இருந்து தன்னை
கலைத்ததில் முதலைக்கு கோபம்..கோபமாக..
வந்தது. “உனக்கு யாரும் நண்பர்கள் கிடையாதா
உதவுவதற்கு” என்றது எரிச்சலுடன் முதலை.

“எனக்கு யாரும் நண்பர்கள் கிடையாது. நான் எல்லோரையும் கொட்டுவதால் என்னை யாரும் விரும்புவதில்லை” என்றது தேள்.
“அதுவும் சரி தான் என்னை மட்டும் யாருக்கு பிடிக்கிறது. எல்லாத்தையும் கடிச்சு வைக்கிறதால என்னைக் கண்டாலே எல்லாரும் ஓடுறாங்க” என்று முதலை தன் சோம்பேறி மூளையை கொஞ்சம் கசக்கி யோசித்தது.





“நாம நண்பர்களாக இருக்க முடியும்” என்றது தேள்
“ஆமாம்” என்றது முதலை

இதில் வேடிக்கை என்னவென்றால் இருவருக்குமே நட்பு என்றால் அர்த்தம் என்ன என்றே தெரியாது.

“சரி அப்படின்னா நான் உங்க முதுகில் ஏறிக்கிறேன், என்னை ஆற்றை கடந்து விட்டு விடுங்களேன்” என்றது தேள்
“என்னை கொட்ட மாட்டாயே?” என்றது முதலை
“என்னை கடிக்க மாட்டிங்களே?” என்றது தேள்

தத்தி தத்தி.. முதலையின் முதுகில் ஏறி கொண்டது தேள். ஆற்றை கடப்பதற்கு இருவரும் தயாரானார்கள்.



தேளுக்கு அடக்கி கொள்ள முடியவில்லை, சிறிய நேரத்திலேயே முதலையின் முதுகில் வழுக்கி கொண்டு போய் அதை சுள்ளென்று.. கொட்டியது!



ZZZT!
ZZZT!
ZZZT!

அடுத்த நிமிடமே
முதலை அதன் அகல
வாயை திறந்து அதன்
கோர பற்களால்

**கடாக்..கடாக்!**

என்று சத்தமிட்டு
தேளை கடித்து விழுங்க
பார்த்தது.





“என்னை கடிக்க மாட்டேன்
என்று சத்தியம் பண்ணீங்களே”
என்றது தேள்.

நீயும் தான்
கொட்டமாட்டேன்னு சத்தியம்
பண்ணியே” என்றது முதலை.


இதெல்லாம்


உன்னுடைய

தப்பு தான்!





இப்படி இருவரும் கத்தி
கொண்டே ஆற்றில் மூழ்கி
போனார்கள்.



இப்பவும் நீங்க அந்த ஆற்றின் கரை ஓரத்தில் சென்று காதை வைத்துக் கேட்டால் இப்போதும் அவர்கள் ஒருவரை ஒருவர் குற்றம் சொல்வதை கேட்பீர்கள்.